REGD. No. TN MS (C) 244 ❋ ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 40 காசு

கலை

அந்தந்த நாட்டுக் கலையே பொது அறிவுக்கு உணவாக இருக்க வேண்டும்.

- பேரறிஞர் அண்ணா


# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்


பரீட்சை

உருப்போட்டு ஒப்புவிப்பது என்பதே எந்தப் படிப்புக்கும் பரீட்சை முறையாக இருக்கக்கூடாது.

- தந்தை பெரியார்

மலர் 5 சென்னை 4—7—1981 சனி வெளியூர் 5—7—1981 ஞாயிறு இதழ் 255

★ தகராறு ஏற்பட்ட நேரத்தில் போலீசார் வந்தனர்.
★ போலீசார் எல்லா வகையான பாதுகாப்பையும் அளித்தனர்.
★ அரிஜனங்களுக்கு ஜாதி இந்துக்கள் பாதுகாப்பு அளித்தனர்.
★ பாதிக்கப்பட்ட குடும்பத்தினருக்கு அரசு தலா 2 ஆயிரம் ரூபாய் தந்தது.

## மக்வானுவின் அபாண்டத்துக்கு

# மக்கள் தந்த பதிலடி

## தி. மு. க.வினரின் தில்லுமுல்லு அம்பலம்

மதுரை, ஜூலை 4- தகராறு நடந்த இடத்திற்குப் போலீசார் வந்ததாகவும், போலீசாரால் இயன்ற அளவு பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்யப்பட்டதாகவும் மண்டபத்தில் மத்திய உள்துறை துணை அமைச்சர் மக்வானுவிடம் மக்கள் கூறினார்கள். கலவரப்பகுதியில் போலீசார் பாதுகாப்பு நடவடிக்கைகளை எடுக்கவில்லை எனக்கூறிய மக்வானுவுக்கு மக்கள் தந்த பதிலடியாக இது இருந்தது.

தகராறு ஏற்பட்டபோது ஜாதி இந்துக்கள் அரிஜனங்களுக்கு பாதுகாப்பு கொடுத்ததையும், பாதிக்கப்பட்டோருக்கு தமிழக அரசு தலா 2 ஆயிரம் ரூபாய் கடன் உதவி அளித்ததையும் மந்திரி மக்வானுவிடம் மக்கள் விரிவாக எடுத்துக் கூறினார்கள்.

மத்திய உள்துறை துணையமைச்சர் மக்வானு ராமநாதபுரம் மாவட்டத்தில் சுற்றுப்பயணம் செய்தார்

ஆங்காங்கே, தி.மு.க.வினரும், கலவரத்தில் ஈடுபட்டவர்களும், மத்திய மந்திரியிடம் மாநில அரசு மீது வேண்டுமென்றே குறை கூறி புகார்களைத் தெரிவித்தனர்.

முஸ்லிம்கள்-அரிஜனங்கள், மற்றும் அரிஜனங்கள்-ஜாதி இந்துக்கள் சம்பந்தப்பட்ட மக்களின் உணர்ச்சிகளைத் தூண்டிவிடக் கூடிய பிரச்சினைகளில் தமிழக அரசு முன்னெச்சரிக்கையான நடவடிக்கைகளையும் அதை தொடர்ந்து தகுந்த நடவடிக்கைகளையும் மிகுந்த ஜாக்கிரதை உணர்வுடன், எடுத்தது.

### தி.மு.க. நாடகம்

உண்மை நிலவரம் இப்படி இருக்க மத்திய மந்திரியிடம் தி.மு.க.வினர் போலீசார் தக்க நடவடிக்கை எடுக்கவில்லை என்று ஒரே மாதிரியான புகார் மனுக்களைத் தயாரித்து அளித்துள்ளனர்.

தி.மு.க.வினர் ஏற்பாடு செய்தவர்கள் மட்டுமே மந்திரி மக்வானுவிடம் மனு அளிக்கவும், பேசவும் அவரைச் சுற்றியிருந்தவர்கள் அனுமதித்தார்களாம்.

மத்திய மந்திரியை சுற்றியிருந்தவர்களின் கெடுபிடியையும் மீறி சிலர் நடந்த உண்மைகளை மந்திரி மக்வானுவிடம் எடுத்துக் கூறியுள்ளனர்.

இந்த விவரத்தை பி.டி.ஐ. செய்தி நிறுவனமே வெளியிட்டுள்ளது.

அச்செய்தி விவரம் வருமாறு:—

ராமேஸ்வரம் கோவிலில் சாமி கும்பிட்ட பிறகு மத்திய மந்திரி மக்வானு பொதுமக்களிடம் மனுக்களைப் பெற்றார்.

பிறகு மந்திரி மக்வானு மீன் வள ஆராய்ச்சி நிலைய அலுவலர் குடியிருப்புக்கு சென்று பார்த்தார்.

(இந்த குடியிருப்பில் இருந்த அரிஜனப்பிரிவைச் சேர்ந்த அலுவலர்கள் தங்கள் குடியிருப்புகளை காலி செய்து விட்டதாகக் கூறப்பட்டிருந்தது.)

மீன் வள ஆராய்ச்சி நிலைய அலுவலர் ஒருவர் மந்திரி மக்வானுவிடம், தகராறு ஏற்பட்ட சமயத்தில் போலீசார் வந்ததாகவும் அரிஜனங்களை பாதுகாப்பான இடத்திற்குச் செல்ல அவர்கள் ஆலோசனை கூறியதாகவும் கூறினார்.

### தக்க பாதுகாப்பு

மந்திரி மக்வானுவிடம் மற்றொரு அலுவலர் நடந்த நிகழ்ச்சிகள் பற்றி விவரிக்கையில் "போலீசார், அவர்களால் எந்த அள

(4ம் பத்தி பார்க்க)

அமைதிப் பேரணி வேண்டாம்

## புரட்சித்தலைவர் முக்கிய அறிக்கை

முதல்வர் புரட்சித் தலைவர் விடுத்துள்ள அறிக்கையில் கூறி இருப்பதாவது:

மத்திய அரசு நியமித்துள்ள விசாரணைக் கமிஷனைத் திரும்பப் பெறக் கோரி அமைதிப் பேரணி ஒன்று நடத்த இருப்பதாக தலைமைக் கழகத்தின் முன் அனுமதி பெறுமலே எம். ஜி. ஆர். மன்றத்தின் சார்பில் அறிக்கை வெளியிடப்பட்டுள்ளது.

தலைமைக் கழகம் இதுகுறித்து இதுவரை எந்த முடிவும எடுக்கவில்லைஎன்பதால் கழகஉடன்பிறப்புகளும், மன்ற உடன் பிறப்புகளும் அறிக்கைகள் வெளியிடுவதோநேரடி நடவடிக்கைகளில் ஈடுபடுவதோ கூடாது என்று அன்போடு வேண்டி கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித் தலைவர் தமது அறிக்கையில் கூறியுள்ளார்.

## தமிழ்ச் சமுதாயத்தை கெடுத்தவர்களாம்: பெண்கள் மீது கருணாநிதி தாக்கு

சென்னை, ஜூலை 4- முதல்வர் புரட்சித்தலைவரை வாழ்த்தி வரவேற்று ஆதரித்து வரும் தாய்க்குலத்தின் மீது ஆத்திரம் கொண்டு கருணாநிதி மீண்டும் வசைபாடத் தொடங்கி விட்டார்.

முதல்வர் புரட்சித்தலைவரை ஆதரித்த தாய்க்குலம் தமிழ்ச் சமுதாயத்தைக் கெடுத்துக் கொண்டு இருக்கிற பயங்கர விபத்தை உண்டாக்கியவர்கள் என்று சாடியிருக்கிறார்.

இரும்புலியூரில் ஒரு திருமண விழாவில் தி. மு. க. தலைவர் பேசியபோது தாய்க்குலத்தின் மீதுவசை புராணத்தை கச்சேரியாக செய்து இருக்கிறார்.

தாய்க்குலத்தின் மீது கருணாநிதி வீசிய வசை புராண விவரம் வருமாறு:

சென்னை செங்கல்பட்டு பகுதியில் உள்ள மக்களுக்கு ஓரளவு அரசியல் விழிப்புணர்ச்சி ஏற்பட்டு இருக்கலாம்.

ஆனாலும் தமிழகத்தில் கிராமப்புறங்களில் இருக்கிற மக்கள் அதிலும் குறிப்பாக தாய்மார்கள்...

இன்னமும் நாட்டிலே நிர்வாகத்தை ஒழுங்காக நடத்தக்கூடியவா யார்? இந்த இனத்தைக் காட்டிக் கொடுக்காமல் இந்த இனத்தினுடைய மேம்பாடுகளை கவனிக்கக்கூடிய இயக்கம் எது?

பெரியார்வழியில் அண்ணா வழியில் நடை போடக் கூடியவர்கள் யார்? —என்பதை சிந்தித்துப் பாராமல் ஏதோ கிராமப் புறத்திலே டெண்ட் கொட்டகையிலே ஓடுகின்ற சினிமாவைப் பார்த்து விட்டு நல்லவனாக நடித்தவரெல்லாம் வாழ்க்கையில் நல்லவராகத்தான் இருப்பார் என்று கருதி தமிழ் சமுதாயத்தைக் கெடுத்துக் கொண்டு இருக்கின்ற அந்த பயங்கரமான அந்த விபத்தில் இருந்து இந்த சமுதாயத்தைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு இங்கே வீற்று இருக்கின்ற நூற்றுக்கணக்கான தாய்மாரகள் கையில் இருக்கிறது.

இவ்வாறு கருணாநிதி பெண்கள் மீது வசை பாடி இருக்கிறார்.

## நாயுடுவை முதல்வர் மீண்டும் சந்தித்தார்

சென்னை, ஜூலை 4— இதய நோயால் அரசு பொது மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வரும் விவசாயிகள் சங்கத் தலைவர் நாராயணசாமி நாயுடுவை முதல்வர் புரட்சித் தலைவர் இன்று காலை மீண்டும்சந்தித்தார்.

நாயுடுவின் உடல்நலம் பற்றி விசாரித்தார். தொடர்ந்து நல்ல சிகிச்சை அளிக்கும்படி டாக்டர்களிடம் முதல்வர் கூறினார்.

## காவல் நிலையத்தில் காதல் ஜோடிக்கு நடந்த திருமணம்

சென்னை, ஜூலை 4— சென்னை வியாசர்பாடியை சேர்ந்தவர் குணசேகரன். (வயது 23) இவர் கூலி வேலை செய்பவர் கோனார் ஜாதியைச் சேர்ந்தவர். இவர் வியாசர்பாடியைச் சேர்ந்த வள்ளி (வயது 21)என்ற அரிஜனப் பெண்ணைக் காதலித்தார்.

ஆனால் இந்தத் திருமணத்திற்கு குணசேகரனின் பெற்றோர் அனுமதிக்கவில்லை.

இதையடுத்து குணசேகரன் ஊர்த்தலைவர் இருதயமணியிடம் விபரத்தைக் கூறினார்.

இருதயமணி அவர்கள் இருவரையும் வியாசர்பாடி காவல் நிலையத்திற்கு அழைத்துச் சென்றார்.

அங்கு இன்ஸ்பெக்டர் சிவலிங்கம், விவரத்தைக் கேட்டறிந்து குணசேகரனுக்கும், வள்ளிக்கும் திருமணத்தை நடத்தி வைத்தார்.

அத்தோடு இன்ஸ்பெக்டர் சிவலிங்கம் திருமண ஜோடிக்கு 25 ரூபாய் அன்பளிப்பும் வழங்கினார்.

அள்ளித்தரும் வள்ளல் புரட்சித்தலைவர் ஆட்சியில்

# "டான்சி" ஊழியர்களுக்கு மிகப்பெரும் ஊதிய உயர்வு

## ரூ. 100 வரை கூடுதலாகக் கிடைக்கும்

சென்னை, ஜூலை 4- தாய்மனத் தலைவன் புரட்சித் தலைவர் ஆட்சியில் "டான்சி" தொழிலாளர்களுக்கு வரலாறு காணாத வகையில் ஊதிய உயர்வு அளிக்கப்பட்டுள்ளது. இதனால் தொழிலாளர்களுக்கு ரூ. 100 வரை சம்பள உயர்வு கிடைக்கும்.

(6ம் பத்தி தொடர்ச்சி)

விற்கு முடியுமோ அந்த அளவிற்கு பாதுகாப்பினை செய்து தந்தார்கள்" எனத் தெரிவித்தார்.

ராமநாதபுரம் மாவட்டத்தில் சிவஞானபுரம் கிராமத்தில் கடந்த ஏப்ரல் மாதம் 13ந்தேதி கலவரம் நடந்த பகுதிக்கு மத்திய மந்திரி மக்வானு சென்று பார்த்தார்.

மந்திரியிடம், தொலைபேசி லைன்மென் கருப்பையா கூறியதாவது:-

கலவரம் ஏற்பட்டபோது ஜாதி இந்துவான ரெவின்யூ இன்ஸ்பெக்டர் ஒருவர் அரிஜனங்களுக்கு பாதுகாப்பு அளித்தார்.

அரசு பாதிக்கப்பட்ட குடும்பத்தினருக்கு தலா 2 ஆயிரம் ரூபாய் வீதம் கடன் அளித்துள்ளது.

இவ்வாறு கருப்பையா கூறினார்.

இத்தகவல்களை பி.டி.ஐ. செய்தி நிறுவனம தெரிவித்துள்ளது.

அண்ணா தொழிற் சங்கப் பேரவை முயற்சியால் தமிழக அரசின் கீழ் உள்ள தமிழ்நாடு சிறு தொழில் நிறுவனத்தின் 57 கிளைகளில் பணிபுரியக் கூடிய சுமார் 5000 தொழிலாளர்களுக்கு வரலாறு காணாத அளவில் ஊதிய உயர்வும் மற்றும் சலுகைகளும், போராட்டமோ, ஆர்பாட்டமோ இன்றி நேரடி பேச்சு வார்த்தையின் மூலம் கிடைத்திருக்கின்றன.

### சலுகைகள் விவரம் வருமாறு

ஒவ்வொரு தொழிலாளருக்கும் குறைந்த பட்சம 70 ரூபாய் 50 பைசாவும் அதிகபட்சமாக ரூ. 100- வரையிலும் மாத ஊதிய உயர்வாக கிடைக்கும். ஆண்டுக்கு ஊதிய உயர்வு மேலும் கூடுதலாக ரூ. 4 வழங்கப்படும். அடிப்படை சம்பளம் ஏற்கனவே இருந்த ரூ. 120- என்பது நிலையான பஞ்சப்படியையும் சேர்த்து தற்போது ரூ. 265- ஆக உயர்த்தப் படுகிறது. பஞ்சப்படி 1960-ஆம் ஆண்டு அடிபடையாக கொண்ட ஒவ்வொரு புள்ளிக்கும் 300 முதல் 365 வரை ரூ. 1-ம் 365 முதல் புள்ளிக்கு ரூ.1,30ம் வழங்கப்படும்.

ஒரே நேரத்தில் புள்ளிக்கு 30 பைசா உயர்வு என்பது மிகவும் குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

சீருடை தையல்கூலிஏற்கனவே கொடுத்ததைவிட ஆண்டுக்கு ரூ. 21 மேலும் கூடுதலாக வழங்கப்படும்.

சலவைப்படி ஏற்கனவே கொடுத்ததை விட மாதம் ரூ. 4 உயர்த்தப்பட்டுள்ளது.

தொழிலாளியின் குடும்பத்தினர் இறந்தால் இறுதி சடங்கிற்கு ஏற்கனவே கொடுத்ததைவிட ரூ. 30 கூடுதலாக கொடுக்கப் படும்.

டான்சியில் உற்பத்தி செய்கிற பொருள்களை வாங்குவதற்கு டான்சி தொழிலாளர்களுக்கு 10 சதம் சலுகை உண்டு.

ஐ. டி. ஐ. படித்த தினக்கூலி தொழிலாளர்களுக்கு ரூ. 10-ம், ஐ. டி. ஐ. படிக்காத தொழிலாளர்களுக்கு ரூ. 8-ம் ஆக உயர்த்தப்பட்டுள்ளது.

### வை. பெருமாள்

மற்றும் பல்வேறு சலுகைகள் இந்த ஒப்பந்தத்தின் மூலம் தொழிலாளர்களுக்கு வழங்கப்படுகிறது. இந்த ஒப்பந்தம் 1.4.81 முதல்அமுலுக்குவருகிறது.

பேச்சு வார்த்தையில் அண்ணா தொழிற்சங்க சார்பில் பேரவைப் பொதுச் செயலாளர். வை. பெருமாள், டான்சி அண்ணா தொழிற்சங்கத் தலைவர் கே. வெங்கடாசலம், பொதுச்செயலாளர் செ.ரா.சீனிவாசன், பொருளாளர் வெ. மாயன் ஆகியோர் கலந்து கொண்டனர்.

புரசைப் பகுதியில்

## மக்கள் ஆதரவு இல்லாததால் இ.காங்கிரஸ் போராட்டம் வாபஸ்

சென்னை, ஜூலை 4- சென்னை அயன்புரம் காவல் நிலையம் முன்பு இ காங்கிரசார் உண்ணாவிரதம் இருந்தனர். சமூக விரோதிகளுக்கு வக்காலத்து வாங்கி உண்ணாவிரதமிருப்பதா என்று அப்பகுதி மக்கள் அதற்கு எதிர்க உண்ணாவிரதம் இருந்தனர்.

பொது மக்களின் ஆதரவை இழந்த நிலையில் இ. காங்கிரஸ் கட்சியினர் தங்கள் உண்ணாவிரதப் போராட்டத்தை வாபஸ் பெற்றுக்கொண்டனர்.

# அந்தக் கதை உங்கள் கதையே!

திரைப்படங்களுக்கு எழுதுகிற கதைகள் எல்லாம் சிந்துவாரற்றுத் தெளிவான தோல்விகளைத் தழுவிக் கொண்டதால் மருமகனின் மஞ்சள் ஏட்டில் 'மலர் மன்னன் கதை' யினை எழுதியிருக்கிறார் கருணாநிதி.

கொள்ளைக்காரன் ஒருவனையும் அவனது மெய்க் காப்பாளர்கள் சிலரையும் பற்றிப் படிப்பவர் நெஞ்சங்களைப்பற்றிப் பிணைக்கும் வகையில் சுவைபட எழுதியிருக்கிறார் கோபாலபுரத்துக் கோமேனி!

'நெஞ்சுக்கு நீதி' யில் எழுத விட்டுப்போனதை நினைத்துப் பார்த்து நேரங்கடந்து எழுதியிருக்கிறார், அஞ்சுகத்தாயின் அருமந்தச் செய் என்பது புரிகிறது.

அந்தக்கதை அவருடைய கதையே தான்!

ஆட்சியிலிருந்தபோது திருச்சி சம்பவத்தையும், ஆளுநர் சங்கடத்தையும் அறிந்து அன்பில் தர்மலிங்கம் அவர்களை அமைச்சரவையிலிருந்து விலக்கிவிட்டுப் பின்னர் தன்னைப்-பற்றி முழுமையாக அறிந்து வைத்திருக்கிற அன்பிலால் எல்லா இரகசியங்களும் அம்பலத்திற்கு வந்து விடுமோ என்று அஞ்சி மீண்டும் அதே அன்பிலை அமைச்சரவையில் சேர்த்துக்கொண்ட கதையினைத் தான் அழகுபட எழுதி நம்மை மகிழ்வித்திருக்கிறார், ஆரூர்ப் பூசாரி.

தான் ஒரு கொள்ளைக்காரன் என்பதைத் தலை நிமிர்ந்து ஒத்துக் கொண்டதற்காக —பிறந்ததிலேயிருந்து இதுவரை அவர் சொன்ன பேருண்மை இது ஒன்றே என்பதற்காக - அவரைப் பெருமைபொங்கப் பாராட்டிட வேண்டியிருக்கிறது.

திட்டமிட்டு அரசியலுக்குவந்து கருணாநிதிஇந்தத் திருநாட்டில் அடித்தகொள்ளைகள் ஒன்றா, இரண்டா?

வள்ளுவர்கோட்டம் துவங்கும்போது ஒருதொகை முடியும்போதோ மூன்று மடங்குத்தொகை - எப்படி ஏற்பட்டது? வரை படங்கள் எங்கே? என்று சட்டப் பேரவையில் மாண்புமிகு ஆர். எம். வீ. அவர்கள் கேள்விக்கணைகள் விடுத்தபோது ''நோக்கத்தைப் பாருங்கள் - நோண்டியதை மறந்துவிடுங்கள்'' என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டவரல்லவா, கருணாநிதி?

கூவம் மணக்கப்போகிறது என்று மக்களிடம் சொல்லி விட்டுக் குடும்பத்தை மணக்க வைத்ததை 'மறக்க முடியுமா'

குரூப்-1 சீட்டுக்களுக்காகக் குடும்பப்பாசத்தோடு பாம்பு ராஜனை விட்டுப் பேரம் பேசி வாங்கிக் குவித்துக் கொண்டது கொஞ்சநஞ்சமல்லவே!

''கண் சிகிச்சைக்காக அமெரிக்கா போகும் முன்பு இரண்டு தலைவர்களை அழைத்துப்போய் பல அலமாரிகளில் கத்தை கத்தையாகக் குவித்து வைக்கப்பட்டிருந்த கரன்சி குவியல்களைக் காட்டினேன்'' என்று கழகப் பொதுக்குழுவில் பேசஉடனே கும்பகோணத்து மணிக்கள் எழுந்து 'வேண்டாம்-அதற்கு மேல் சொலாதீர்கள்' என்று கூச்சல் போட்டதை நினைத்துப் பார்க்கிறேன்.

அந்தப் பணங்கள் கொள்ளையடித்தவை தானே?

அடித்த கொள்ளையில் ஆயிரத்தில் ஒரு பங்கை அப்படிக் காட்டியிருக்கலாம் — மற்றவை ஆஸ்தி பாஸ்தி வாங்கத் தானே பயன்பட்டிருக்கும்?

அவதரித்திருக்கிற ஆண் பிள்ளைகள் அனைவருக்கும் ஆளுக்கொரு மாளிகை — வாழ்வுக்கு நிரந்தர வருமானம் வரச் சில வழிகள்!

பிறக்கிற ஒவ்வொரு பெண் குழந்தைக்கும் பேதமில்லாமல் 'வைரசெட்டு'கள் என்கிற வகையில் சேர்த்து வைத்திருக்கிற அத்தனையும் "ஒன்பதாண்டுக் கோட்டைவாசம்" தந்தவைகள் தானே?

ஆட்சி கலைக்கப்பட்டதும் உடனடியாக டெல்லிப் பட்டணத்து வீதிகளில் 'கருணாநிதி முப்பது கோடியைச் சேர்த்து விட்டார்'என்று அகில இந்திய காங்கிரஸ் சார்பில் நோட்டீஸ் போட்டு விநியோகித்தார்களே!

அதை அகில இந்தியக் காங்கிரஸ் இன்றுவரை வாபஸ் பெற்றுக் கொள்ளவில்லை என்பதை மறந்துவிடக்கூடாது

''ஆப்ரகாம்லிங்கன்சிலைக்குள் வைரத்தை வைத்து அமெரிக்காவிலிருந்து கடத்தி வந்து அகப்பட்டுக் கொண்டு பம்பாயில் பட்டப்பாடு எங்களுக்கல்லவா தெரியும்?'' என்று காங்கிரஸ்காரர்கள் அன்று பேசியவை இன்றும் நம் காதுகளில் ரீங்காரமிட்டுக் கொண்டுதான் இருக்கின்றன.

அந்தப் புகாரையும் இன்றுவரை அகில இந்தியக் காங்கிரஸ் வாபஸ் பெறவில்லை என்பதையும் ஆரூர் நரிக்கு ஞாபகப்படுத்தி வைக்கிறோம்.

. இன்னும் ஆயிரம் இருக்கின்றன!

அனைத்தையும் குறிப்பிட்டால் ஆத்திரம் பிறக்கும் அவருக்கு!

விலை போனதுகள் எழுதுகின்றன என்று எழுதி உடன்பிறப்புகளுக்கு வெறியூட்டிப் பாய வைத்து விடுவார்.

அருமைப் பெரியவர் கருணாநிதிக்கு நாம் அடக்கத்தோடு சொல்லிக் கொள்பவை சில.

கோடி கோடியாக மக்கள் பணத்தைக் கொள்ளையடித்தவர் நீங்கள் என்பதை உங்களால் மதிக்கப்படுகிறவர்கள் தான் சொன்னார்கள்.

சம்பல் பள்ளத்தாக்குக் கொள்ளைக்காரனை விடமோசமான கொள்ளைக்காரன் நீங்கள் என்று அருகிலிருக்கிற ஆருயிர் இளவல் தான் சொன்னார்.

உங்களுக்குத் தரப்பட்டிருக்கிற அந்தச் சிறப்புப் பட்டங்களை மற்றவர்கள் தலையில் இறக்கி வைக்க முயற்சிக்க வேண்டாம் என்பதை மட்டும் பணிவோடு சொல்லி வைக்கிறோம்.

கால் காசு யாருக்கும் கொடுத்தறியாத கருணாநிதி 'கடத்தல்காரன்' 'கொள்ளைக்காரன்' என்கிற அவருக்குரிய பட்டங்களைப் பிறருக்கு தாரை வார்க்க வேண்டாம் என்பது நம்முடைய வேண்டுகோள்.

-:திருவை அண்ணாமலை:-

# உளியால் தாக்கி போலீசாரைக் கொல்ல முயற்சி

## நடுரோட்டில் கட்டிப் புரண்டு போலீசாருடன சண்டை போட்ட ஆசாமி

சென்னை, ஜூலை 4—உளியால் தாக்கிப் போலீசாரைக் கொல்ல முயற்சி செய்த ஆசாமியைப் போலீசாரும் பொதுமக்களும் கட்டிப் புரண்டு சண்டை போட்டுப் பிடித்தனர்.

சென்னை டி. பி. சத்திரம் பகுதியைச் சேர்ந்தவர் சுப்பிரமணியம் என்ற குர்பானி (வயது-23).

இந்த ஆசாமி மீது கோர்ட்டுகளில் பல்வேறு வழக்குகள் நடந்து வருகின்றன.

சென்னை பூந்தமல்லி ஐரோட்டில் பச்சையப்பன் கல்லூரி அருகே பஸ் ஸ்டாப்பில் பஸ்சுக்காக காத்திருந்த பெண்ணை ஆட்டோ ஒன்றில் கடத்திச் சென்ற போது, அந்தப் பெண் அண்ணாநகரில் ஆட்டோ சென்றபோது அதிலிருந்து குதித்துத் தப்பினார்.

இது தொடர்பாகவும் இந்த ஆசாமி மீது வழக்கு நடந்து வருகிறது.

நேற்றுதலைமைக்காவலர் முத்துசாமி, மற்றும் காவலர் முகமதுஉசேன் ஆகியோர் டி. பி. சத்திரம் பகுதியில் சென்று கொண்டிருந்தனர்.

அப்போது சுப்பிரமணியம் உளி ஒன்றால், முத்துசாமியையும் முகமது உசேனையும் தாக்கினாராம்.

இதையடுத்து அந்த இரு போலீசாரும் மற்றும் பொதுமக்களும் சுப்பிரமணியத்தை விரட்டிப் பிடித்தனர்.

அப்போது சுப்பிரமணியம் தன்னைப் பிடித்தவர்களுடன் கட்டிப்புரண்டு சண்டை போட்டதாகவும் கூறப்படுகிறது.

இதையடுத்து போலீசார் சுப்பிரமணியத்தைக் கைது செய்தனர்.

கோட்டையில்

## டைப்பிரைட்டிங் மிஷின் திருட்டு: ஆசாமி கைது

சென்னை, ஜூலை 4-தமிழக அரசு தலைமைச் செயலகத்தில் தன்னை ஓர் மெக்கானிக் எனக் கூறிக்கொண்டு 4 டைப்ரைட்டிங் மிஷன்களை திருடியதாக மோகன் என்ற நபர் கைது செய்யப்பட்டார்.

மோகன் புதுக்கோட்டையைச் சேர்ந்தவராம்.

## மயிலையில் டாக்டர் நாவலர் பேசுகிறார்

சென்னை, ஜூலை 4—சென்னை மயிலை மாங்கொல்லையில்வரும் 6ந்தேதி (திங்கள்) மாலை 6 மணிக்கு சந்திரா மோகன் தலைமையில் நடைபெறும் பொதுக்கூட்டத்தில் நிதியமைச்சர் டாக்டர் நாவலர் சிறப்புரையாற்றுகிறார்.

தென் சென்னை மாவட்ட மகளிர் அணி சார்பில் நடக்கும் இக்கூட்டத்தில் நிதியமைச்சர் டாக்டர் நாவலர், அமைச்சர் கோமதி சீனிவாசன், சத்தியவாணிமுத்து எம்.பி முசிறிப்புத்தன்எம்.எல்.ஏ. கபாலி எம். எல். ஏ., சுலோசனா சம்பத், பா.வளர்மதி, புலவர் இந்திரகுமாரி, மந்தவெளி நடராசன், வி.மாணிக்கம், மயிலை தமிழ்மணி, அருள்மொழி மற்றும் பலர் பேசுகின்றனர்.

### புரசைவாக்கம்

5—7—81 ஞாயிறுமாலை 7 மணிக்கு வெள்ளாளத் தெருவில் செயராமன் தலைமையில் பேசுவோர்:—

திருவை அண்ணாமலை, சி.வி.ஆடலழகன், வண்ணை கோவிந்தன், தரங்கை கண்ணன், கணபதி ராவ், வ. கோதண்டராமன், வ.சீனிவாசன் மற்றும் பலர்.

### தியாகராயநகர்

5—7—81 ஞாயிறு மாலை 6 மணிக்கு பஸ்நிலையம் அருகில் ஆறுமுகம்தலைமையில் பேசுவோர்.

ஜேப்பியார் எம் எல் சி, வேலூர் நாராயணன், திருவை அண்ணாமலை, புலவர் இந்திரகுமாரி, கு.க. செல்வம், தி. நகர் மூர்த்தி, சா. கோவிந்தசாமி, சச்சிதானந்தம், சாமிநாதன், ராஜேந்திரன் நடராசன், முனுசாமி மற்றும் பலர்.

## வில்லிவாக்கம் ஒன்றிய கழக ஆலோசனைக் கூட்டம்

சென்னை, ஜூலை 4—வில்லிவாக்கம் ஒன்றிய கழக ஆலோசனைக்கூட்டம் நாளை (5ந்தேதி) ஞாயிறு காலை 10 மணிக்கு பொருர் சரஸ்வதி ஆங்கிலப் பள்ளியில் ஒன்றிய அவைத்தலைவர் செ. சிவப்பிரபு தலைமையில் ஜே. சி. டி. பிரபாகரன்எம்.எல்.ஏ. முன்னிலையில் நடைபெறுகிறது. அனைவரும் கலந்து கொள்ளுமாறு ஜனார்த்தனம் கேட்டுக் கொண்டுள்ளார்.

ராஜஸ்தானில் 22 இ. காங்: எம். எல். ஏக்கள் கோரிக்கை

## பதுக்கல்காரர்களுக்கு பாதுகாப்புத் தரும் மந்திரிவிலகவேண்டும்

ஜெய்ப்பூர், ஜூலை 4. ராஜஸ்தான் அமைச்சர் சந்தன்மால் பதுக்கல்காரர்களுக்கும், கள்ள மார்க்கெட்காரர்களுக்கும், கலப்படக்காரர்களுக்கும், பகிரங்கமாக பாதுகாப்பு தருகிறார் என்று ராஜஸ்தான் மாநில இந்திரா காங்கிரஸ் எம்.எல்.ஏக்கள் 22பேர் குற்றம் சாட்டியுள்ளனர்.

அமைச்சர் சந்தன்மால் உடனடியாக ராஜினாமா செய்யவேண்டும் என்று இவர்கள் கோரியுள்ளனர்.

ராஜஸ்தான் இந்திரா காங்கிரஸ் உட்பூசலில் திடீரென்று ஒரு புதுத் திருப்பம் ஏற்பட்டுள்ளது. ராஜஸ்தான்முதலமைச்சர் ஜெகந்நாத் பகாடியாவை ஆதரிக்கும் 22 எம். எல். ஏக்கள் ஒரு திடீர் அறிக்கையை வெளியிட்டுள்ளனர்.

பகாடியா அமைச்சரவையில் கல்வி அமைச்சராக சந்தன்மால் என்பவர் இருக்கிறார்.

கோஷ்டிப் பூசல் கடுமையாக வளர்ந்து வருகிறது.

அமைச்சரவைக் கூட்டம் கடந்த முறை நடந்தபோது சந்தன்மாலுடன் 3 அமைச்சர்கள் கடுமையாக பேசியதாகவும் சொல்லப்படுகிறது.

இப்போது சந்தன்மாலுக்கு எதிராக 22 எம். எல். ஏக்கள் அறிக்கை வெளியிட்டுள்ளனர்.

பதுக்கல்காரர்கள், கள்ள மார்கெட்காரர்கள், கலப்படக்காரர்கள், கடத்தல் ஆசாமிகளுக்கு மந்திரி சந்தன்மால் பகிரங்கமாக பாதுகாப்பு தருகிறார்.

ஆகவே அவர் உடனடியாக பதவி விலக வேண்டும் என்று கோரி இருக்கிறார்கள்.

இந்த அறிக்கையில் ராஜஸ்தான் விவசாய தொழில் கார்ப்பரேஷன் தலைவர், வீட்டு வசதி வாரியத் தலைவர் போன்றவர்களும் கையெழுத்திட்டிருக்கிறார்கள்.

### மறைவு

ஈரோடு நகர 19 வது வட்ட பிரதிநிதி என். ரங்கராஜின் தந்தை கடந்த 29ந்தேதி இரவு காலமானார்.

## அரபு நாடுகட்கு ஏலக்காய் தூதுக்குழு

சென்னை, ஜூலை 4—இந்தியாவில் உற்பத்தியாகும் ஏலக்காயை வெளிநாடுகளில் அதிக அளவு விற்பனை செய்யவும், அது பற்றிய நிலவரங்களை ஆராய்ந்து அறியவும் ஏலக்காய் வாரியத்தின் தலைவர் கே. மோகனசுந்தரத்தின் தலைமையில் நாராயணசாமி, காந்தி மற்றும் புருஷோத்தமன் நாயர் ஆகியோர் அடங்கிய தூதுக்குழு கடந்தமாதம் லிபியா ஜோர்டான், எகிப்து ஆகிய நாடுகளுக்கு பயணம் செய்தது. அங்குள்ள வணிக நிலவரங்களைக் கண்டறிவதுடன். மத்திய கிழக்கு நாடுகளில் எதிர்காலத்தில் மேற்கொள்ள வேண்டிய விற்பனை முன்னேற்ற நடவடிக்கைகள் குறித்து அங்கு வணிக முன்னேற்றத்துறை இயக்குனர் பி. டி. கேமானியுடன் பேச்சு வார்த்தை நடத்தப்பட்டது.

மேலும்மேற்குறித்தநாடுகளில் உள்ள ஏலக்காய் மற்றும் வாசனை திரவியப் பொருட்கள் துறையைச் சார்ந்த வணிகத் துறையின் அதிகாரிகள் அனைவருடனும் பேச்சு வார்த்தை நடைபெற்றது.

இந்த குழுவின் வெளிநாடு பயணத்தால் எதிர்காலத்தில் ஏலக்காய் வெளி நாடுகளில் அதிக அளவு விற்பனை ஆகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## செம்பனார் கோவிலில் வலம்புரிஜான் பேசுகிறார்

தஞ்சாவூர், ஜூலை 4—தஞ்சாவூர் மாவட்டம் செம்பனார் கோவிலில் நாளை 5ம் தேதி நடைபெறும் கழக பொதுக் கூட்டத்தில் "தாய்" ஆசிரியர் வலம்புரிஜான் பேசுகிறார்.

கீழ்த்தஞ்சை மாவட்ட புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். மன்ற செயலாளர் என். விஜயபாலன், தலைவர் ஆர். ராமகிருஷ்ணன், துணைச்செயலாளர்கள்எம். அச்சுதன், அப்துல்லா, ஆகியோருக்கு பாராட்டு விழாவும் அப்போது நடைபெறுகிறது. ஏ.அப்துல்லத்திப் தலைமையில் ஆர். பி. மூர்த்தி, மகாலிங்கம், கோவி. நாராயணசாமி, தம்பி. பாலவேலாயுதம், என்.ஜி. கலியபெருமாள், எஸ். முத்துக்கிருஷ்ணன், கே. வி. பாலு, த.லோகநாதன் து.கோவிந்தராஜ், பொ.மா. கணேசன், அரசுநமசு சிவ. கோவிந்தராஜன், தங்க குலோத்துங்கன், வை.சக்ரபாணி, எம். ஜி. ராமலிங்கம் ஆர். கருணாகரன் ஆகியோர் பேசுகிறார்கள்.

புதுக்கோட்டை மாவட்டம்

## வறட்சி நிவாரணத்துக்கு ரூ. 3.80 கோடி ஒதுக்கீடு

புதுக்கோட்டை, ஜூலை 4—புதுக்கோட்டை மாவட்டத்தில்வறட்சி நிவாரணப் பணிகளுக்கு கடந்தமாதம் 26 தேதி வரை3 கோடியே 80 லட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.

இந்த ஒதுக்கீட்டில் இதுவரை 152 லட்சம் ரூபாய் செலவு செய்யப்பட்டுள்ளது. இதுவரை 1179 வறட்சி நிவாரணப்பணிகள் முடிக்கப்பட்டும், 1940 நிவாரணப்பணிகள் நடைபெற்றும் வருகின்றன.

இந்த மாவட்டத்தில் இதுவரை வறட்சி நிவாரணப்பணிகளில் மொத்தம் 15 லட்சத்து 34 ஆயிரத்து 342 பேர் ஈடுபடுத்தப்பட்டுள்ளனர்.

புதுக்கோட்டை மாவட்ட ஆட்சித்தலைவர் எஸ். டி. காசிராஜன் இத்தகவலை தெரிவித்திருக்கிறார்.

## திருநெல்வேலி அரிஜன காலனியில் தீ: வீடுகள் எரிந்து சாம்பல்

### பாதிக்கப்பட்டோருக்கு தலா ரூ.200 உதவி

திருநெல்வேலி, ஜூன் 4— திருநெல்வேலியை அடுத்த பேட்டையில் நேற்று தீ விபத்து ஏற்பட்டது. 35 குடிசைகள் எரிந்து சாம்பலாயின. 30 ஆடுகளும்100 கோழிகளும் இந்த விபத்தில் கருகி செத்தன. பாதிக்கப்பட்டோருக்கு தலா ரூ. 200 மற்றும் புடவை வேட்டிகள் வழங்கப்பட்டன.

திருநெல்வேலியை அடுத்துள்ள பேட்டை என்கிற அரிஜன் காலனியில்நேற்று திடீரென்று தீவிபத்து ஏற்பட்டது. சுமார் 35 வீடுகள் இந்த விபத்தில் எரிந்து சாம்பலாயின.

பாளையங்கோட்டை மற்றும் திருநெல்வேலியில் உள்ள தீயணைப்புப்படைகள்விரைந்துசென்று தீயை அணைத்தன. ஆனாலும் 30 ஆடுகள் 100 கோழிகள் இந்த விபத்தில்கருகி செத்தன.

விபத்தில்பாதிக்கப்பட்ட குடும்பங்களுக்கு தலா 200 ரூபாய், மற்றும் புடவை, வேட்டிகள், வழங்கப்பட்டனவருவாய்த் துறை அதிகாரிகள் நிவாரண வேலைகளில் தீவிரமாக செயல்பட்டனர்.

ஒரு குடிசையில் இருந்த அடுப்பில் இருந்து கிளம்பிய தீப்பொறியே இந்த விபத்துக்குக் காரணம் என்று கூறப்படுகிறது.

## மின்சாரம் பாய்ந்து வைக்கோல் லாரி நாசம்

திருநெல்வேலி மூலகருப்பட்டி அருகே கேரளாவை நோக்கி சென்று கொண்டிருந்த வைக்கோல் லாரி ஒன்று நேற்று திடீரென்று தீப்பிடித்துக் கொண்டது. சாலை ஓரம் விழுந்து கிடந்த மின்சார கம்பி ஒன்றில் இருந்து லாரிக்கு மின்சாரம் பாய்ந்ததால லாரி திடீரென்று தீப்பிடித்துக் கொண்டது. பெட்ரோலும் வைக்கோலும் சேர்ந்து எரிந்ததால் லாரி பூராவும் நாசமானது.

டிரைவர் லாரியைவிட்டு தப்பி ஓடி உயிர் பிழைத்தார்.

ஆயிரம் விளக்கு தொகுதி பொருளாளர்

## சலீம் தந்தை மறைவு: கே. ஏ. கே. இரங்கல்

சென்னை, ஜூலை 4—ஆயிரம்விளக்குத் தொகுதி கழகப் பொருளாளர்வழக்கறிஞர்சலீமின் தந்தையார் நேற்று இரவு இயற்கை எய்தினார்.

அமைச்சர் கே. ஏ. கே. இன்றுகாலை சலீம் இல்லத்திற்கு நேரில்சென்று மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினார்.

சலீமுக்கும், அவரது குடும்பத்தாருக்கும்அமைச்சர் ஆறுதல் கூறினார்.

இன்று மாலையில் நடைபெறும் இறுதிச்சடங்கிலும் அமைச்சர் கே. ஏ. கே. கலந்துகொள்கிறார்.

## டான்சி தொழிலாளர் அரசுக்கு நன்றி

திண்டுக்கல், ஜூலை 4—டான்சி நிறுவனத்தில் வேலை பார்க்கும் தொழிலாளர்களுக்கு குறைந்தபட்ச ஊதிய உயர்வு 70 ரூபாய் 50 காசு என்று உயர்த்திய புரட்சித்தலைவர் அரசுக்கும், தொழிலாளர் நல அமைச்சருக்கும், ஊரகத்தொழில் அமைச்சருக்கும், அண்ணா தொழிற்சங்கப் பேரவையின் பொதுச்செயலாளர் வை. பெருமாளுக்கும் டான்சி நிறுவனத் தொழிலாளர்கள் சார்பில் மாநில துணைத்தலைவர் வில்லியம் நன்றி தெரிவித்துள்ளார்.

## வறட்சி நிவாரணம்: கவர்னர் பாராட்டு

திருச்சி. ஜூலை 4—தமிழக அரசின் வறட்சி நிவாரணப் பணிகளை தமிழக கவர்னர் சாதிக் அலி பாராட்டியுள்ளார்.

புதுக்கோட்டை மாவட்டத்தில் நடைபெற்று வரும் வறட்சி நிவாரணப் பணிகளைப் பார்வையிட்ட கவர்னர் சாதிக்அலி- வறட்சி நிவாரணப்பணிகள் திருப்திகரமாக நடைபெறுவதாக தெரிவித்தார்.

முன்னதாக வயலோகம் கிராமத்தில் தாய் சேய் நல விடுதியை கவர்னர் சாதிக்அலி திறந்து வைத்தார்.

## அறங்காவலர் நியமனம்

சென்னை, ஜூன் 4—சென்னை கோடம்பாக்கம் பாரத்துவாஜேஸ்வரர் கோவில் அறங்காவலர்களாக எஸ். சந்திரசேகரராஜா, ஜெயராமன், பி. எஸ். மணி, எம். ஜி. ஜீவா, டி. நாராயணசாமி ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

ஜெயராமன் அறங்காவலர் குழுத்தலைவராகதேர்ந்தெடுக்கப்பட்டார்.

வடபழனி கோவில் அறநிலையத்துறைஅதிகாரி லிங்கம ராஜா முன்னிலையில் புதிய அறங்காவலர்கள் பதவிஏற்றனர்.

# ★ கல்வி நிலையங்களில் அரசியல் வராமல் தடுக்கும் தமிழகம்
# ★ மேல்நிலைப்பள்ளிகளில் தொழிற் பயிற்சியில் முன்னணி
## புரட்சித்தலைவர் அரசுக்கு
# மத்திய மந்திரி பாராட்டு

சென்னை, ஜூலை 4- தமிழகத்தில் கல்வி நிலையங்களில் அரசியல் புகுவதைத் தடுக்க அனைத்துக் கட்சித் தலைவர்கள் கூட்டம் நடத்தி ஆலோசனை நடத்திய தமிழக அரசு முயற்சிக்கு மத்திய கல்வி அமைச்சர் எஸ். பி. சவான் பாராட்டு தெரிவித்தார்.

தமிழகத்தில் உள்ள மேல் நிலைப் பள்ளிகள் தொழிற்பயிற்சி தருவதில் முன்னணியில் இருப்பதற்கும் மத்திய அமைச்சர் பாராட்டு தெரிவித்தார்.

பள்ளிக்கல்வி இயக்குனரகம் ஏற்பாடு செய்துள்ள தொழில் கல்வி கண்காட்சியை மத்திய கல்வி அமைச்சர் சவான் தொடங்கி வைத்தார்.

பள்ளித்தலைமை ஆசிரியர் சங்கத்தின் ஆண்டு விழாவிலும் மத்திய அமைச்சர் கலந்துகொண்டு பேசினார்.

விழாவுக்கு தமிழக கல்வி அமைச்சர் அரங்கநாயகம் தலைமை வகித்தார். இந்த விழா சென்னை கிறித்துவக் கல்லூரி மேல்நிலைப்பள்ளியில் நடைபெற்றது.

விழாவைத் தொடங்கி வைத்து மத்திய கல்வி அமைச்சர் சவான் பேசியதாவது:-

கல்லூரிகளில் மட்டும் இருந்து வந்த அரசியல் இப்போது பள்ளிகளிலும் தலைகாட்டத் தொடங்கி விட்டது.

கல்வி நிலையங்களில் அரசியலை நடத்துவதில்லை என்று அரசியலவாதிகள் முடிவு எடுக்க வேண்டும்.

அப்போது தான் நாட்டில் நிலவும் அமைதியின்மையில் பாதிப் பிரச்சினை உடனடியாக நின்று போகும்.

### தமிழக முயற்சிக்குப் பாராட்டு

இதன் தொடர்பாக அனைத்துக்கட்சித் தலைவர்களுடன் தமிழக கல்வி அமைச்சர் ஆலோசனை நடத்தி இருக்கிறார். இதற்கு பாராட்டுத் தெரிவித்துக்கொள்கிறேன்.

பள்ளித்தலைமை ஆசிரியர்கள் அரசியலில் பங்கு பெறலாமா என்று கேட்கப்படுகிறது.

பள்ளித்தலைமை ஆசிரியர்கள் அரசியலில் சொந்த முறையில் பங்கு பெறுவதில் எந்தத்தவறும் இல்லை.

ஆனால் கல்வி நிலையங்களில் பணியாற்றும்போது அவர்கள் ஆசிரியர்களாக இருக்கவேண்டும்.

பள்ளி வேலைக்குப்பிறகு வெளியே அரசியலில் பங்கு பெறுவதில் எந்தத்தவறும் இல்லை.

பள்ளிகளில் மாணவர்களைச் சேர்ப்பதற்கு ஒரு குறிப்பிட்ட தொகையை நிர்வாகத்தினர் வாங்குவது சரியல்ல. இப்படி வசூல் செய்வது கண்டனத்துக்கு உரியதாகும்.

அதே நேரத்தில் ஏழை எளிய மாணவர்களுக்கு வசதி செய்து கொடுக்க வசதிபடைத்த பெற்றோர்களிடமிருந்து நன்கொடை வசூலிக்கலாம்.

இங்கே தலைமை ஆசிரியர்கள் சார்பில் ஒரு கோரிக்கையை வைத்து இருக்கிறார்கள்.

### பள்ளி மானியக் கமிஷன்

பள்ளிகளுக்காக ஒரு மானியக் கமிஷன் அமைக்கப்பட வேண்டும் என்று கோரி இருக்கிறார்கள்.

இந்தக் கோரிக்கை குறித்து மாநில கல்வி அமைச்சர்கள் அளவில் முடிவு எடுத்து மத்திய அரசுக்கு சிபாரிசு செய்தால் இதுபற்றி மத்திய அரசு பரிசீலிக்கத் தயாராக இருக்கிறது.

கல்வித் துறையில் பணியாற்றுபவர்களுக்கு என தனியாக "சர்வீஸ்" ஒன்றை ஏற்படுத்த வேண்டும் என்பது குறித்தும் மாநில அரசுகள் ஆலோசித்து ஒரு முடிவு எடுத்தால் அது குறித்தும் மத்திய அரசு பரிசீலிக்கத் தயாராக இருக்கிறது.

மேல் நிலைப்பள்ளிகளில் தொழில் கல்வி பயிற்சி தருவதில் தமிழகம் இந்திய துணைக்கண்டத்தில் முன்னணியில் இருக்கிறது. இதற்கும் எனது பாராட்டைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தொழிற் கல்விப் பயிற்சி தருவதில் அந்தந்த இடத்திற்கு தகுந்தாற்போல பாடத்திட்டம் இருக்கவேண்டும்.

ஒவ்வொரு பகுதியிலும் எந்த எந்த வகையான தொழிற் பயிற்சியை தொடங்கலாம் என்பது குறித்து கணக்கெடுப்பு நடத்தப்படும்.

தொழிற் படிப்புதிட்டம் ஒரு சிலர் மேல்படிப்பு படிக்காமல் இருப்பதற்காக கொண்டு வரப்பட்ட திட்டம் அல்ல. இப்படிக் குற்றஞ்சாட்டுவது சரியானது அல்ல.

இவ்வாறு மத்திய கல்வி அமைச்சர் எஸ். பி. சவான் கூறினார்.

### அரங்க நாயகம்

விழாவுக்குத் தலைமை வகித்த கல்வி அமைச்சர் அரங்கநாயகம் பேசியதாவது:-

கல்வித் திட்டத்தில் தக்க மாறுதல்களைச் செய்தால் தான் வேலை இல்லாத் திண்டாட்டம் என்ற மாபெரும் பிரச்சினைக்குத் தீர்வுகாண முடியும்.

அந்த அடிப்படையில் தான் தொழிற் பயிற்சி கல்வியை தமிழக அரசு கடைப்பிடித்து வருகிறது.

ஆண்டுக்கு ஆண்டு படித்துப் பட்டம் பெற்று வேலை இல்லாமல் அவதிப்படுகிறவர்கள் எண்ணிக்கை அதிகரித்து வருவது சமுதாயத்திற்கு பெரிய ஆபத்தை விளைவிக்கும்.

ஆகவே படித்த இளைஞர்கள் சுயமாக தொழில்களை நடத்தும்விதத்தில்கல்வித் திட்டத்தில் மாறுதல் செய்யப்பட்டது.

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.

விழாவினை ஒட்டி வெளியிடப்பட்ட சிறப்பு மலரை கல்வி இலாகா செயலாளர் சி. ராமதாஸ் வெளியிட்டார்.

விழாவிற்கு வந்திருந்தவர்களை பள்ளிக் கல்வி இயக்குனர் கே. வேங்கட சுப்பிரமணியம் வரவேற்றார்.

---

### அமைச்சர் ராஜாமுகமது நிகழ்ச்சிகள்

ஜூலை 8ந் தேதி காலை 10 மணி திருச்சி, இரவு 7 மணிவரை கரூர் தொகுதி இரவு 9 மணிக்கு சிந்தாமணிப்பட்டி பொதுக் கூட்டம்; 9ந் தேதி தேனி தொகுதி, 10ந் தேதி கடலாடி தொகுதி, 11ந் தேதி காலை மதுரை மாவட்ட உலேமாக்கள் வரவேற்பு, மாலை 4 மணி திருவில்லிப்புத்தூர் தொகுதி.

12-ந் தேதி மதுரையில் தையல்கலைஞர்கள் மாநாடு இரவு மதுரை, 13-ந் தேதி காலை 10-30 மணி சிவலப்பேரி பராக்கிரம பாண்டியன் கால்வாய் திறப்பு.

14-ந் தேதி கருப்பசாமி பாண்டியன் ஏற்பாடு செய்துள்ள நிகழ்ச்சிகள். இரவு கன்னியாகுமரி

15-ந் தேதி மாலை 6-30 மணி கன்னியாகுமரி மாவட்ட உலேமாக்கள்வரவேற்பு, 16. 17, 18-ந் தேதிகள் மதுரை புறநகர் மாவட்டம்.

---

### செய்தி-சுற்றுலா தமிழ் பண்பாட்டுக்கு தனித்துறை

சென்னை, ஜூலை 4— செய்தி-சுற்றுலா தமிழ் பண்பாடு என்றதொரு தனித்துறையைஉருவாக்கி அரசு ஆணையிட்டுள்ளது.

செய்தி மக்கள் தொடர்புத் துறையின் பணிகள் அதிகரித்து வருவதாலும், தமிழ்நாட்டில் சுற்றுலா வளர்ச்சியை அதிகப்படுத்தவும்தமிழ்மொழி பண்பாட்டு வளர்ச்சிக்கென தகுந்த கவனிப்பை செலுத்தவும் வேண்டி செய்தி சுற்றுலா மற்றும் தமிழ் பண்பாடு என்ற ஒரு தனித்துறையைஉருவாக்கி தமிழக அரசு ஆணையிட்டுள்ளது.

செய்தி,மக்கள்தொடர்பு சுற்றுலா மற்றும் தமிழ்ப் பண்பாடு ஆகிய பணிகளைக் கொண்டு இந்த துறை இயங்கும்.

---

பெண்கடத்தல் குற்றச் சாட்டுக்கு ஆளான

### இப்ராகிமை விலக்க குண்டுராவ் மறுப்பு

புதுடெல்லி, ஜூலை 4— பெண் கடத்தல் குற்றச் சாட்டுக்கு ஆளாகி இருக்கும் கர்நாடக அமைச்சர் சி. எம். இப்ராகிமை அமைச்சர் பதவியில் இருந்து விலக்க முடியாது என்று கர்நாடக முதல்வர் குண்டுராவ் கூறினார்.

பெண் கடத்தல பிரச்சினையில் இப்ராகிம் மீது குற்றஞ்சாட்டி 27 கர்நாடக எம். எல். ஏக்கள் இப்ராகிமை அமைச்சர் பதவியில்,இருந்து நீக்க கோரி இருக்கிறார்கள்.

எதிர்க்கட்சியினர் கோருவது நேர்மையற்றது அரசியல சட்டத்திற்கு முரணானது என்று குண்டுராவ் கூறினார்.

---

பாரதிதாசன் பிறந்த நாள் விழா:

### நிதியமைச்சர் டாக்டர் நாவலர் பங்கேற்பு

சென்னை, ஜூலை 4— பாவேந்தர் பாரதிதாசன் இலக்கியமன்ற சார்பாக பாரதிதாசன் பிறந்தநாள் விழா வடபழனி சி. எம். யு. அரங்கில் (கமலா தியேட்டர் அருகில்) 5ந் தேதி மாலை 6 மணிக்கு தில்ருபா சண்முகம் தலைமையில் நடக்கிறது.

இந் நிகழ்ச்சியில் நிதியமைச்சர் டாக்டர் நாவலர், மேலவைத் துணைத் தலைவர் புலமைப்பித்தன், நடிகமணி டி. வி. நாராயணசாமி, மன்னர் மன்னன், எம். கோபால், கவிஞர் சாமி பழனியப்பன், கு.க. செல்வம், புலவர் தட்சிணாமூர்த்தி, கவிஞர் பொன்னடியான் ஆகியோரும் மற்றும் பலரும் பேசுகிறார்கள்.

---

### திருமணம்

சென்னை 22-வது வட்ட மேலமைப்புப்பிரதிநிதி எம். சிவலிங்கத்திற்கும் எம். சாரதாவிற்கும் சென்னை கடற்கரை சாலை பதிவு திருமணக் கூடத்தில் திருமணம் நடந்தது. வட்டசெயலாளர் கே.எல். கோவிந்தராசன் அவைத் தலைவர் டி. டி. சண்முகம் துணைச் செயலாளர்வி.எம் லோகநாதன் மேலமைப்பு பிரதிநிதி பி.எம். சீராளன் சார்பு மன்றச் செயலாளர்கள் ராஜ்மோகன், கே. பெருமாள் எஸ். பி. பன்னீர்செல்வம்என்.கிருஷ்ணமூர்த்தி ஆகியோர்மணமக்களை வாழ்த்தினர்.

---

## கிறிஸ்துவ இலக்கிய வளர்ச்சிக்கு தனித்துறை
### தமிழக அரசுக்கு ரெக்ஸ் பாராட்டு

சென்னை, ஜூலை 4— தமிழ் கிறிஸ்துவ இலக்கிய வளர்ச்சிக்காக சென்னை பல்கலைக் கழகத்தில் ஒரு தனித்துறை ஆரம்பிக்க அரசு உத்தரவிட்டிருப்பது பாராட்டுக்குரியது என்று சென்னை நகர ஷெரீப் டாக்டர் ரெக்ஸ் தெரிவித்துள்ளார்.

இது குறித்து அவர் வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில் கூறியுள்ளதாவது:

தமிழகஅரசு கிறிஸ்துவ இலக்கிய வளர்ச்சிக்காக சென்னை பல்கலைக்கழகத்தில் ஒரு தனித்துறையை உடனடியாக ஆரம்பிக்கும் வகையில் ஆணை பிறப்பித்திருப்பதனை தமிழகத்தில் உள்ள 25லட்சம்கிறிஸ்துவ மக்களின் சார்பில் மனமாரப் பாராட்டுகிறேன்.

இதுவரை தமிழகத்தில் யாரும்ம செய்யாத ஒரு செயலை தமிழக முதல்வர் புரட்சித்தலைவர்செய்திருப்பது பாராட்டுக்குரியது. இந்த ஆணையை பிறப்பித்த முதல்வர் புரட்சித் தலைவரின் பெயர் பொன் எழுத்துக்களால் பொறிக்கத்தக்க நிலையான இடத்தை பெற்றுள்ளார்.

இதன் மூலம் கிறிஸ்துவ மக்களின் இதயங்களில் இடம் பெற்றுவிட்டார்.

இதுவரை சென்னை பல்கலைக் கழகத்தில் இஸ்லாமியம், சைவ சித்தாந்தம், திருக்குறள் ஆகிய துறைக்கு தமிழக அரசு தனித்துறை நிறுவி இருந்தது.

சமீபத்தில் வீரமாமுனிவர் மூன்றாம் நூற்றாண்டு விழாவில் முதல்வர் கலந்து கொண்ட போது கிறிஸ்துவ இலக்கிய வளர்ச்சிக்காக ஒரு லட்சம் ரூபாய் செலவில் ஒரு தனித்துறை நிறுவ வேண்டும் என்று கேட்டுக் கொண்டேன். ஆனால் முதல்வர் புரட்சித் தலைவர் தற்போது ஐந்தரை லட்சம் ரூபாய் செலவில் ஒரு தனித்துறை அமைக்க உத்திரவிட்டுள்ளார். அதுவும் உடனடியாக அரசின் அவசர நிதியிலிருந்து இதற்கு செலவிட வழி செய்துள்ளார்.

இதற்காக தமிழக கிறிஸ்துவசமுதாயத்தினர் தமிழக முதல்வர் புரட்சித் தலைவருக்கு என்றும் நன்றி உடையவர்களாக அவரது நல்ல பணிகளில் எப்போதும் உறுதுணையாக இருப்பார்கள் என்றும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு அவர் தன் அறிக்கையில் கூறியுள்ளார்.

---

விவசாய தொழிலாளர்களுக்கு

# பாதுகாப்புச் சட்டம்: மத்திய அமைச்சரிடம் ராகவானந்தம்கோரிக்கை

சென்னை. ஜூலை 4 - கட்டிட தொழிலாளர் மற்றும் விவசாயத் தொழிலாளருக்கு பாதுகாப்பு அளிக்க மத்திய அரசு கொண்டு வர இருக்கும சட்டங்களை விரைவில் கொண்டு வர வேண்டுமென்று தமிழக தொழிலாளர நல அமைச்சர், ராவானந்தம் மத்திய அமைச்சா என. டி. திவாரியிடம வலியுறுத்தினா

சென்னை வந்திருக்கும்மத்தியதிட்டதொழிலாளர்நல அமைச்சர்திவாரியைதமிழக தொழிலாளர் நல அமைச்சர் ராகவானந்தம் நேற்று காலை சந்தித்து பேசினார்

பொதுவாக தொழிலாளர் நிலை பற்றி அப்போது இரண்டு மந்திரிகளும் ஆலோசனை நடத்தினார்கள். புள்ளி விவர இலாக்கா பணிகள் குறித்தும் அவர்கள் பேசினார்கள்.

தமிழகத்தில் தொழில் அமைதி நிலவுவது பற்றி மத்திய அமைச்சா மகிழ்ச்சி தெரிவித்தார்.

கட்டிடத் தொழிலாளர்கள், விவசாயத் தொழிலாளர்கள் ஆகியோருக்கு பாதுகாப்பு அளிக்கும் வகையில் மத்திய அரசு கொண்டு வரவிருக்கும் சட்டங்களை விரைவில் கொண்டு வருமாறுஅமைச்சர் ராகவானந்தம் மத்திய அமைச்சரை அப்போது வலியுறுத்தினார். வேறு சில சட்டங்கள் பற்றியும் ராகவானந்தம் குறிப்பிட்டபோது அதுபற்றி விவரமாக தனக்கு கடிதம் மூலம் தெரிவிக்குமாறு மத்திய அமைச்சர் கேட்டு கொண்டார்.

சிவகாசிக்குச் சென்று அங்குள்ள தொழிலாளர் நிலை பற்றி கண்டறிய வேண்டும் என்று திவாரி தெரிவித்தபோது குழந்தைகளை வேலைக்கு அமர்த்துவதை பரிசீலித்து ஆவன செய்ய ராமநாதபுரம் மாவட்ட ஆட்சித் தலைவரை தலைவராகக் கொண்டு மாவட்ட அளவில் ஒரு மாவட்டக் குழு அமைக்கப்பட்டுள்ளதாகவும், மாநில அளவில் தன்னைத் தலைவராகக் கொண்டு ஒருகுழு அமைக்கப்பட்டுள்ளதாகவும் அமைச்சர் ராகவானந்தம் எடுத்துக் கூறினார்.

---

கழக கொடியேற்றுவித்து

### ஆயிரம் விளக்கு தொகுதியில் அமைச்சர் கே. ஏ. கே. பேசுகிறார்

சென்னை, ஜூலை 4— சென்னை ஆயிரம் விளக்கு தொகுதி 106 வது வட்டத்துள்ள வாலர்ஸ்கார்டன் குடிசை மாற்று வாரிய பகுதியில் நாளை 5-ந்தேதி (ஞாயிறு) காலை 9 மணிக்கு குடி நீர்குழாயை திறந்துவைத்து அமைச்சர் கே.ஏ.கே. சிறப்புரையாற்றுகிறார்.

கழகக் கொடியை ஏற்றி வைத்து அமைச்சர் கே.ஏ.கே உரையாற்றுகிறார். புரட்சித்தலைவர் நற்பணி மன்றத்தினர் ஏற்பாடு செய்துள்ளனர்.

---

### கழக கூட்டத்தில் குடிபோதையில் கலாட்டா

சென்னை, ஜூலை 4. சென்னை 53 வது வட்டத்தில் கடந்த 2ந்-தேதி நடந்த கழகப் பொதுக் கூட்டத்தில் கோடம்பாக்கம் குமார், மது சூதனன். மண்ணடி கிருஷ்ண மூர்த்தி, கஜேந்திரபாபு, எல்லப்பன் ஆகியோர் பேசினர்.

மதுசூதனன் பேசிக் கொண்டிருந்த போது இந்திரா காங்கிரஸ் பிரமுகர் கோவிந்தராஜ் என்பவர் கலாட்டா செய்தார். இவர் குடி போதையில் இருந்ததாகத் தெரிகிறது, கழகத்தோழர்கள் அவரைப் பிடித்துப் போலீசில் ஒப்படைத்தனர். போலீசார் வழக்குப் பதிவு செய்துள்ளனர்.

---

ஒரே பிரசவத்தில்

### 48 வயது பெண்ணுக்கு 4 குழந்தைகள்

புதுடெல்லி, ஜூலை 4— டெலி ஆஸ்பத்திரியில், 48 வயது பெண்ணுக்கு ஒரே பிரசவத்தில் 4 குழந்தைகள் பிறந்தன. இதில்ஒன்றுபெண்குழந்தையாகும். மற்ற 3 குழந்தைகளும் ஆண் குழந்தைகளாகும்,

52 வயதாகும் இப்பெண்ணின் கணவர் 5 நட்சத்திர ஓட்டல் ஒன்றில்சமையல்காரராக பணியாற்றி வருகிறார்.

25 வருடங்களுக்கு முன்னர் திருமணம் செய்து கொண்ட இவர்களுக்கு ஏற்கனவே 3 குழந்தைகள் உள்ளன.

---

பெங்களூர் 11-வது வட்டத்தில்

### கிளைக் கழக துவக்க அடிக்கல் நாட்டு விழா

பெங்களூர், ஜூலை 4— பெங்களூர் ஸ்ரீ ராமபுரம் 11.வது வட்ட கிளைக் கழக கட்டிடத்திற்கான அடிக்கல் நாட்டு விழா கடந்த மாதம் 28-ந் தேதி ஜி.கோபால்தலைமையில், எம். தேவராஜ் முன்னிலையில் நடைபெற்றது.

11-வது வட்ட செயலாளர் கே. சடகோபன் அடிக்கல் நாட்டினார். இவ்விழாவில் அறிவரசன், மூர்த்தி, முத்து, தசரதன் பத்மநாபன் ஆகியோர் கலந்து கொண்டனர். கட்டிட கொத்தனார் சபாபதி அனைவருக்கும்இனிப்பு வழங்கினார்.

---

### தமிழ் பல்கலைக்கழக வல்லுநர் குழு பதவி நீடிப்பு

சென்னை, ஜூலை 4 தமிழ் பல்கலைக்கழகம் அமைப்பது பற்றி அரசுக்கு ஆலோசனை கூற வல்லுநர் குழு அமைக்கப்பட்டிருந்தது தெரிந்ததே.

இந்த வல்லுநர்குழுவின் பதவிக்காலம் 28-4-81 அன்று முடிவடைந்தது இந்தக் குழுவின் பதவிக் காலத்தை 29-4-81 லிருந்து மேலும் ஓராண்டு காலத்திற்கு அரசு நீட்டித்துள்ளது.

---

இந்திரா காங்கிரஸ் ஆர்ப்பாட்டம்

### அனுமதி மறுப்பு: போலீஸ் கமிஷனர் பேட்டி

சென்னை, ஜூலை 4— முதல்வர் புரட்சித்தலைவர் வீட்டு முன்பு இளைஞர் இந்திரா காங்கிரஸ்காரர்கள் ஆர்ப்பாட்டம் நடத்த இருப்பது பற்றிய கேள்விக்கு சென்னை போலீஸ்கமிஷனர் ஸ்ரீபால் ஒரு பேட்டியின் போது பதில் அளித்தார்.

தனியார் வீடு முன்பு ஆர்ப்பாட்டம் நடத்துவதற்கு அனுமதி இல்லை. இதை மீறி ஆர்ப்பாட்டம் செய்வார்களேயானால் சட்டப்படி அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப் படும் என்று கூறினார்.

இம்மாதம் 5ம் தேதி சென்னையில் விவசாயிகள் ஊர்வலம்நடத்த விருப்பது பற்றிய கேள்வி ஒன்றுக்குப்பதில் அளித்த கமிஷனர் விவசாயிகள் ஊர்வலத்திற்கு அனுமதி அளிக்கப்பட்டிருப்பதாகக் கூறினார் ஊர்வலத்தில் கலந்துகொள்ள வருபவர்கள் நடந்தே வருவதாகக் கூறியிருக்கிறார்கள் என்றும் லாரிகளில் வருவதற்கு தடை உத்தரவுஏற்கனவே அமுலில் இருந்து வருகிறது என்றும் குறிப்பிட்டார்.

---

ஆத்தூருக்கு புதிய பஸ்வசதி:

### கழக அரசுக்கு பாராட்டு

சேலம், ஜூலை 4— சேலம் மாவட்டம் ஆத்தூரிலிருந்து காட்டுக் கோட்டை, சார்வாய், தேவியாக் குறிச்சி, தலைவாசல், புத்தூர், வேப்பநத்தம் ஆகிய கிராமங்களுக்கு அண்ணா போக்குவரத்து கழகத்தினரால் புதிய டவுன் பஸ் விடப்பட்டுள்ளது. முன்புஇருந்த தனியார்பஸ் ரூட்டைவிட அரசு பஸ்சில் டிக்கெட்டு கட்டணமும் தற்போது குறைவாக உள்ளது.இதற்காக இப்பகுதி மககள் கழக அரசுக்கும் முதல்வர் புரட்சித் தலைவருக்கும், அமைச்சர்முத்துசாமிக்கும் தங்கள் நன்றிகளையும் பாராட்டுகளையும், தெரிவித்துக் கொளகின்றனர் என்று ஆத்தூர் தாலுகா அறிஞர் அண்ணா நற்பணி மன்றச் செயலாளர் தென்னரசு தெரிவித்துள்ளார்.

---

கலைக்குழு முகவரி:

கோவை விஜயா
42, பெரியசெட்டி தெரு
திருச்சி 8.

# அண்ணா



## 54 வது தொழில் நுட்ப பட்டதாரிகள் கோர்ஸ்

### ஜனவரி - 1981

1982 ஜனவரி மாதம் முதல் இந்திய (MILITARY ACADEMY) கழகத்தில் 54-வது தொழில் நுட்ப பட்டதாரிகள் கோர்ஸ்-களின் கீழ் துவங்க இருக்கும் தனிப்படை, பீரங்கிப்படை, காலாட்படை, பொறியியல்படை, சிக்னல்கள், மின்சார மற்றும் மெக்கானிக்கல் இன்ஜினீயரிங், மற்றும் மிலிடரி பண்ணை ஆகியவற்றின் நிரந்தர கமிஷனில் (PERMANENT COMMISSION) பணிபுரிவதற்கான விண்ணப்பங்கள் ஆண்களிடமிருந்து வரவேற்கப்படுகின்றன.

வயது வரம்பு: அபேட்சகர்கள் 2-1-1955-க்கு முன்னதாகவோ அல்லது 1-1-1962 க்குபின்னும் பிறந்தவர்களாக இருக்கக் கூடாது.

குறைந்த பட்ச கல்வித் தகுதிகள்: (அ) தனிப்படை, பீரங்கிபடை, — காலாட்படை — பொறியியல் — சிக்னல் மின்சார—மற்றும் மெக்கானிக்கல் இன்ஜினீயரிங் சிவில், எலக்ட்ரிகல், மெக்கானிகல், ஆர்க்கிடெக்சர், இண்டஸ்டிரியல், புரொடக்ஷன், ஆட்டோமொபைல் மற்றும் எலக்ட்ரானிக்ஸ் மற்றும் டெலிகம்யூனிகேஷன் இன்ஜினீயரிங் ஆகியவற்றில் பட்டப்படிப்பு—டிப்ளமோ (பட்டப்படிப்புக்கு சமமானது) பெற்றிருக்க வேண்டும். அல்லது ஒரு அங்கீகரிக்கப்பட்ட பல்கலைகழகத்திலிருந்து எலக்ட்ரானிக்ஸில் முக்கியபாடமாக பெற்று எம்எஸ்ஸி., பௌதிகம் படித்திருக்க வேண்டும். (ஆ) மிலிடரி பண்ணைக்கு—ஒரு அங்கீகரிக்கப்பட்ட பல்கலைக்கழகத்திலிருந்து பால் பண்ணை சம்பந்தமானபாடங்களுடன் வேளாண்மை பட்டப்படிப்போ அல்லது பால் பண்ணை பட்டப்படிப்போ அல்லது அதற்கு சமமான வேளாண்மையில் வெளி நாட்டுப் பட்டப்படிப்புபெற்றிருக்க வேண்டும். எம். எஸ்ஸி பட்டப்படிப்பு பெற்றிருப்பவர்களுக்கும் அல்லது பால் பண்ணை அல்லது கால் நடைத்தீவனங்கள் ஆகியவற்றில் ஆராய்ச்சி செய்பவர்களுக்கும் முதலிடம் வழங்கப்படும்.

குறிப்பு: (1) மாநில தொழில் நுட்பக்குழுவினரால் டிப்ளமோ வழங்கப்பெற்றவர்கள் விண்ணப்பம் செய்யதகுதியுடையவர்கள் அல்ல (11) 1981 டிசம்பர் 31ம் தேதிக்குள் தேர்வுகளை எழுதி வெற்றி பெறும் வாய்ப்புள்ளவர்களும் விண்ணபிக்க தகுதி பெற்றவர்களாவார்கள்.

விண்ணப்பம் பெற்றுக்கொள்வதற்கான இறுதி தேதி 1981 ஜூலை 31.

இதர விவரங்களுக்கு புதுடெல்லி எம்ப்ளாய்மெண்ட் நியூஸ், ரோஜ்கார் சமாச்சார் பத்திரிகைகள் 27-6-1981 தேதியிட்ட இதழ்களில் வெளியான விளம்பர எண் davp—686—52—814 பார்க்கவும்.

davp 686 (53). 81

## தமிழ்நாடு வீட்டு வசதி வாரியம்

## சம்பந்தப்பட்டவர்களுக்கு அறிவிப்பது யாதெனில்:

"ஒதுக்கீடு செய்யப்பட்ட தேதி முதல் மூன்று வருட காலத்திற்குள் அண்ணா நகர் திட்டப் பகுதியில் தங்களுடைய காலியாக உள்ள மனைகளில் வீடுகள் கட்டிக் கொள்ளாத ஒதுக்கீடு செய்யப்பட்டவர்களுக்கு (ALLOTTEES) காரணம் காட்டுமாறு (SHOW CAUSE) நோட்டீஸ் அனுப்பப்பட்டுள்ளது."

அண்ணா நகர் திட்டப்பகுதியில் 1964ம் ஆண்டே பெரிய வீட்டுமனைகளும் மற்றும் பண்படுத்தப்பட்ட வீட்டுமனைகளும் ஒதுக்கப்பட்டு விட்டன. குத்தகை மற்றும் விற்பனை ஒப்பந்த அடிப்படையில், ஒதுக்கீடு செய்யப்பட்டவர்கள், வீட்டுவசதி வாரியத்தினால் அங்கீகரிக்கப்பட்டபடி ஒதுக்கப்பட்ட தேதி முதல் மூன்று வருட காலத்திற்குள் வீடுகளைக் கட்டி முடித்திருக்க வேண்டும்.

குறிப்பிட்ட மூன்றுவருட காலத்திற்குள் அந்த பிளாட்டுகளில் கட்டிடங்கள் கட்டாமலிருப்பது விற்பனை&குத்தகை ஒப்பந்தத்தின்படி விதிகளை மீறும் செயலாகும். எனவே அவர்கள் சார்பில் அளிக்கப்பட்டுள்ள "ஒதுக்கீடுகள்" ரத்துச் செய்யப்படுவதுடன் மேற்படி பிளாட்டுகளை வீட்டுவசதி வாரியம் மேற்கொள்ளுவதுடன் அவர்களின் டேவணித் தொகை டெபாசிட்டும் பறிமுதல் செய்யப்படும். இந்த அறிவிப்பையே "காரணம் காட்டுவதற்குரிய அறிவிப்பாக" (Show Cause Notice) எடுத்துக்கொண்டு ஒதுக்கீடு செய்யப்பட்டவர்கள் அதற்கான தகுந்த காரணங்களை 20-7-1981 - தேதிக்கு முன்னதாக குத்தகை மற்றும் விற்பனை ஒப்பந்தத்தில் கண்டுள்ள விதிகளை மீறியதற்காக அவர்களிடமுள்ள பிளாட்டை மீட்டுக்கொண்டு அவர்களுக்கு அளிக்கப்பட்டுள்ள ஒதுக்கீட்டை ஏன் ரத்துச் செய்யக்கூடாது என்பதற்கான தகுந்த காரணங்களைத் தெரிவிக்க வேண்டும்.

இன்னமும், தங்களின் பிளாட்டுகளை காலியாகவே வைத்திருப்பவர்களிட (ALLOTTEES) மிருந்து இந்த பத்திரிகை "அறிவிப்பிற்கிணங்க" குறிப்பிட்ட தேதிக்கு முன்னதாக எந்தவித பதிலும் கீழ் கையொப்பமிட்டவருக்கு வரவில்லையெனில், அவர்களால் தகுந்த திருப்திகரமான காரணங்கள் ஏதும் அளிக்க இயலாதவர்கள் எனக் கருதி, மேற்படி, ஸ்தலத்தை மீட்டுக் கொள்வதற்கான மேல் நடவடிக்கைகள் வீட்டுவசதி வாரியத்தினரால் மேற்கொள்ளப்படும்.

**நிர்வாகப் பொறியாளர் & நிர்வாக அதிகாரி**
அண்ணா நகர் டிவிஷன்

DIPR. 33304. 81. 50

# முன்பு தானைத்தலைவர்; இன்று முந்தானை தலைவர்; கருணாநிதிபற்றிஅனந்தன்

**சென்னை, ஜூலை -4 ஒரு காலத்தில் தானைத் தலைவராக இருந்த கருணாநிதி இப்போது முந்தானைத் தலைவராக ஆகிவிட்டார் என்று குமரி அனந்தன் கூறினார்.**

சென்னை சைதாப்பேட்டை தேரடித்திடலில் ஆறுமுகம் தலைமையில் நடந்த காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ் கூட்டத்தில் குமரி அனந்தன் எம். எல். ஏ. லால்சந்தாகா சாமிசண்முகம், பூமிநாதன் காசிநாதன், சேலம் சகுந்தலா, சரோஜா மற்றும் பலர் பேசினர்.

காந்தி காமராஜ் தேசிய காங்கிரசின் தலைவர் குமரி அனந்தன் பேசுகையில் கூறியதாவது:-

நாங்கள் வெறும் பெயருக்காக மட்டும் போராட்டம் நடத்துபவர்களல்ல.

சட்டமன்றத்திலும் நாடாளுமன்றத்திலும் முத்திரைகளை பதிப்பவர்கள்.

ஏறி நிற்கும் விலைவாசி இறங்க வேண்டும் என்று கேட்கிறோம். வாஞ்சிநாதன் பெயரை ரயில் நிலையத்துக்கு வைக்க வேண்டும் என்கிறோம்.

1911-ம் ஆண்டு ஜூன் 11-ந் தேதி வாஞ்சி, ஆஷ்துரையை சுட்டார். கடந்த 70 ஆண்டுகளில் வாஞ்சி நாதன் தினம் கொண்டாடப்பட்டதில்லை. இந்த ஆண்டு தொலைக் காட்சியிலும், வானொலியிலும் கொண்டாடினார்கள். இதுவே காந்தி காமராஜ் தேசிய இயக்கத்திற்கு ஒரு வெற்றி தான். எரிசாராய விசாரணைக்காக அமைக்கப்பட்ட கமிஷனை எரிக்கச்சொன்னவர் கருணாநிதி. மனோகரனை உள்ளே போக வைத்தவர், எங்கள் கட்சி அப்படிப்பட்ட கட்சியல்ல.

### நாங்கள் சகிப்பதில்லை

போராட்டத்திற்கு பெயர் கொடுத்து விட்டு போகாமலிருப்பவர்களை நாங்கள் சகிப்பதில்லை. அவர்கள், பெயர் தெரியாமல் போய் விடுவார்கள்.

ஆணைஎரிப்பு போராட்டம் எப்போது நடத்த வேண்டும்? அது கடைசி கட்டமல்லவா?

"மாங்குயில்கூவிடும்பூஞ்சோலை; எம்மை மாட்ட நினைத்திடும் சிறைச்சாலை" என்ற பாரதிதாசனின் கவிதைகளைச் சொல்லி முழக்கமிட்டு தி. மு. க. வினர் உள்ளே போனார்கள்.

மத்திய சிறையிலிருந்து கொண்டு ஆர்.டி. சீதாபதி, "மேலவைக் கூட்டத்தில் கலந்து கொள்ளலாமா?" என்றுகேட்டும.பொ.சி.க்கு கடிதம் எழுதுகிறார்.

சட்டமன்றம் சென்டிரல் சிறையிலா நடக்கிறது? செயின்ட்ஜார்ஜ் கோட்டையில் அல்லவா?

மிசாவில் அடிபட்டு செத்த சாத்தூர் பாலகிருஷ்ணன், சிட்டிபாபுவை சொன்னார்கள். அந்த இடத்திலேதான்சீதாபதி, மனோகரன், கருணாநிதி இருக்கிறார்கள்.

கிராமத்திலே, தன்மகளை அத்தை மகனுக்கு தருவதாக வாக்கு கொடுத்த பின் கோடி கோடியாகத் தருகிறேன் என்று சொன்னாலும் வாக்குத் தவறாதவர்கள் உள்ள நாடு இது.

### கருணாநிதி பதில் சொல்லட்டும்

1969லிருந்து, தமிழகத்திலிருந்து வெளிமாநிலங்களுக்கு அனுப்பப்பட்ட எரிசாராயத்தில் தவறு நடந்திருக்கிறது.

அது குறித்து விசாரணை நடத்த வேண்டும் என்று கருணாநிதி மீது புகார் கூறி மனு கொடுத்திருக்கிறோம்.

மாநில அரசு நியமித்திருக்கும் சதாசிவம் கமிஷனை சட்டப்படி கலைக்காமல் இருப்பது சரியல்ல என்று கருணாநிதி சொல்கிறார்.

அப்படி எந்த சட்டம் கூறுகிறது என்பதைகருணாநிதி எடுத்துச் சொல்ல வேண்டும்.

கமிஷனை மாநில அரசு நீடிக்கலாம்; மத்திய அரசு கமிஷனை நியமிக்கலாம் என்று தான் சட்டம் சொல்கிறது. எங்காவது மாநில கமிஷனை கலைக்க வேண்டும் என்று சட்டத்திலே கூறியிருந்தால் கருணாநிதி சொல்லட்டும்.

எம்.ஜி.ஆர். மீது புகார் கொடுக்கப்பட்டிருக்கிறது. அது வரட்டும். நாங்கள் தடுக்கவில்லை. எம். ஜி. ஆரே தன்னை விசாரணைக்கு ஆட்படுத்திக் கொண்டார்.

### ஏன் கேட்கவில்லை?

1972ம் ஆண்டு கருணாநிதி அரசைப் பற்றி புகார் சொன்ன போது பிரதமராக இருந்த இந்திரா உடனே கமிஷன் போட்டாரா?

அந்த புகார் மனுவை கருணாநிதிக்கு அனுப்பி அபிப்பிராயம் கேட்டார் இந்திரா.

அதுபோல்ஏன் எம். ஜி. ஆரை கேட்க வில்லை?

கருணாநிதிக்குவெண்ணை எம். ஜி. ஆருக்கு சுண்ணாம்பா?

72ல் அந்த வாய்ப்பு கருணாநிதிக்கு கொடுத்ததாலதான் எம். ஜி. ஆர். கல்யாணசுந்தரத்தைப் பார்த்து 'பார்த்தேன், படித்தேன் ரசித்தேன்' என்றார். இப்போது நேரடியாக கமிஷன் நியமித்ததேன்?

புகாரின் முதுகெலும்பை ஒடிக்கும் பதில் என்று கருணாநிதி அச்சிட்டு கொடுத்தாரே? எம். ஜி. ஆருக்கு ஏன் அந்த வாய்ப்பில்லை?

அன்றைக்கு தரப்பட்ட புகார்கள் 50க்கு மேலே, விசாரணைக்கு அனுபப்பட்டது 27 தான்.

இன்று தந்த புகார் அத்தனைக்கும் ரேகமிஷனு?

எம்.ஜி.ஆர். கைலாசம் கமிஷன் அமைத்தபோது கருணாநிதி அதை எதிர்க்கவில்லை. கைலாசம் நீதிபதியாக இருப்பதைத்தான் எதிர்த்தார். அதனால்தான் கைலாசம் வீட்டுக்கு ஊர்வலம் போனார்.

மாநில கமிஷனை எதிர்த்திருந்தால் கோட்டைக்கு ஊர்வலம் போயிருப்பார்.

### மாநிலத்தை அவமதிப்பதா?

சதாசிவம் கமிஷன் அமைக்கப்பட்டஒருமாதம் கழித்து மத்திய அரசு கமிஷன் அமைப்பதை மாநிலத்தை அவமதிப்பதாக எங்கள் இயக்கம் கருதுகிறது.

10 லட்சம் லிட்டருக்கு மேலே ஏன்போனது என்று கேட்பார்கள். கேட்கட்டும். "தமிழகத்தின் எல்லையைத் தாண்டும் வரை, தவறு நடக்கவில்லை, அங்கே போகும்போது ஏதாவது நடந்திருந்தால் நான் என்ன செய்யட்டும்" என்று எம். ஜி. ஆர். கேட்கக்கூடும்.

எரிசாராய ஊழலைகண்டுபிடித்தது நாயனர்அரசாங்கம். ஏதோ கருணாநிதியும் மனோகரனும் கண்டு பிடித்தது போல குதியோ குதி என்று குதிக்கிறார்கள்.

10 லட்சம் லிட்டர் அதிகமாகி விட்டதற்கு தான் மத்திய அரசு விசாரணை.

கருணாநிதி மீது நாங்கள் சாட்டியுள்ள குற்றம் ஒரு கோடியே 84 லட்சம் லிட்டர் எரிசாராயம் அவரது ஆட்சியில் முறைகேடாக அனுப்பப்பட்டது என்பது தான்.

அதனால்தான் சதாசிவம் கமிஷன் சட்டப்படி சரியில்லைஎன்கிறார்கருணாநிதி. மூப்பனாரும் சட்டப்படி சரியில்லைச்சட்டம் ஒழுங்கு சரியில்லை என்கிறார்.

இந்திரா காங்கிரஸ் ஊழியர் கூட்டத்தில் சட்டையை கிழித்துக் கொண்டு வருபவர்கள் சட்டம் ஒழுங்கு சரியில்லை என்கிறார்கள்.

இந்திராவை எதிர்த்து திருவாரூர் தேராக நிமிர்ந்து நின்ற கருணாநிதி இப்போது தெரு ஓரத்து கல்லாக இருக்கிறார்.

### தாளமும் தளமும

இந்திரா பிரதமராக இருந்த போது கருணாநிதி முதலமைச்சராக இருந்து கொண்டு கடற்கரையில் பேசினார். 'காமராஜரை கைது செய்யச் சொன்னார் இந்திரா. நான் தான் மாட்டேன்என்று சொல்லி விட்டேன் என்றார்.

அன்று இந்திராவை ராட்சசி என்று சொன்ன கருணாநிதி இன்று ரட்சகி என்கிறார். ஒருகால் போயிருக்கிறது. முடமாகி இருக்கிறது.

அவசர நிலையின் போது பத்திரிகை தணிக்கைகள் செய்தார்கள். அப்போது 'விளக்கெண்ணை உடம்புக்கு நல்லது' என்று எழுதினார் கருணாநிதி. இன்று இந்தியை போதிக்க மத்திய அரசு ஆசிரியர்களை அனுப்புகிறேன்' என்று சொல்லும் போது வாய்மூடி மவுனியாக இருக்கிறார்.

என்னைப் பார்த்து எம்.ஜி.ஆருக்கு தாளம் போடுகிறேன் என்கிறார்.

எம். ஜி. ஆர். நான் விரும்பும் குழந்தை. எங்காவது கோடு விழுந்து விடக் கூடாது என்று கருதுகிறேன்.

கண்டிக்க வேண்டியதை நாங்கள் கண்டிக்கிறோம். பாராட்ட வேண்டியதை நாங்கள் பாராட்டுகிறோம். குற்றச்சாட்டு சொன்னால் எம். ஜி. ஆர், ஏற்றுக் கொள்கிறார். அரவணைக்க வேண்டிய போது அரவணைக்கிறார்.

விளக்கெண்ணை கருணாநிதியை கேட்கிறேன் செங்கோட்டையில் இந்திராவை அமர்த்தியதிலிருந்து நீங்கள் எதிர்த்ததுண்டா?

கருணாநிதிமுன்புதானைத் தலைவராக இருந்தார். இப்போதுமுந்தானைத்தலைவராக இருக்கிறார்.

இவ்வாறு குமரி அனந்தன் கூறினார்.

## மாணவர்களுக்கு 99 ரூபாயில் கடிகாரம்

சென்னை, ஜூலை 4— டைம்ஸ்டார் கடிகார நிறுவனமும் வி.ஜி.பி. நிறுவனமும் சேர்ந்து சென்னையில் 'டைம்ஸ்டார் கண்காட்சி'யை நடத்துகின்றனர்.

இந்த கண்காட்சியை அண்ணாசாலையில் உள்ள வி.ஜி.பி. அலுவலகத்தில் அமைச்சர் அரங்கநாயகம் தலைமையில் அமைச்சர் கே.ஏ.கே. துவக்கி வைத்தார்.

வி.ஜி. பன்னீர்தாஸ், சந்தோஷம், செல்வராஜ் ஆகியோர் வரவேற்று நன்றி கூறினர்.

முன்னதாக 'டைம்ஸ்டார்' நிறுவன நிர்வாக இயக்குனர் பூணம்பாய்ஷா நிருபர்களிடம் கூறியதாவது:.

டைம்ஸ்டார் நிறுவனத்தில் இப்போது நாளொன்றுக்கு 2 ஆயிரம் கடிகாரங்கள் தயாரிக்கப்படுகின்றன 35 வகையான கடிகாரங்களைத் தயாரிக்கிறோம்.

இந்தியாவிலேயே முதல் முறையாக மாணவர்களுக்கு சலுகை முறையில் கை கடிகாரம் வழங்கும் திட்டத்தை இப்போது சென்னையில் அறிமுகப்படுத்தியிருக்கிறோம்.

வி.ஜி.பி.யில் கண்காட்சி 30 நாட்களுக்கு நடக்கும்.

இந்த நாட்களில் மாணவர்கள், உடல் ஊனமுற்றவர்களுக்கு 99 ரூபாயில் கடிகாரம் வழங்குகிறோம். மாணவர்கள் தங்களின் அடையாள அட்டை, அல்லது தலைமை ஆசிரியரின் சான்றிதழ் பெற்றுக் கொண்டு வந்து காட்டி சலுகை முறையில் அளிக்கும் கடிகாரத்தைபெற்றுக் கொள்ளலாம்.

பொது மக்கள் தங்கள் கடிகாரத்தில் எந்தப்பகுதியில் பழுது ஏற்பட்டுள்ளது என்பதை அறிந்து கொள்ளும் வகையில் நவீன யந்திரத்தை கண்காட்சியில் வைத்திருக்கிறோம். இலவசமாக பரிசோதனை செய்து கொள்ளலாம்.

இவ்வாறு பூணம்பாய்ஷா கூறினார்.

விழாவில் திருமதிபூணம் பாய்ஷா உடல் ஊனமுற்ற 11மாணவர்களுக்கு இலவசமாக கை கடிகாரங்களை வழங்கினர்.

கீழ்த்தஞ்சையில்

### கழகப் பொதுக்கூட்டம்

தஞ்சை, ஜூலை 4— கீழ்த்தஞ்சை மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற பொறுப்பாளர்களுக்கு பாராட்டு விழாவும், கழகப் பொதுக் கூட்டமும் ஏ. அப்துல் லத்தீப் தலைமையில் ஆர். வி. மூர்த்தி முன்னிலையில் இம்மாதம் 5ந்தேதி(ஞாயிற்றுக்கிழமை) செம்பனார் கோயில் செல்வம் சதுக்கத்தில் நடைபெறுகிறது. மன்றச் செயலாளர் விஜயபாலன் எம். எல் ஏ. தலைவர் இராமகிருஷ்ணன், மற்றும் அச்சுதன், அப்துல்லா ஆகியோரை பாராட்டி வலம்புரி ஜான், கோவி. நாரயணசாமி, தம்பி பாலவேலாயுதம், கவியபெருமாள், லோகநாதன், சக்கரபாணி, அரசுநமசு, முத்துகிருஷ்ணன், சிவ. கோவிந்தராஜன், து. கோவிந்தராஜ், குலோத்துங்கன், பாபு, கணேசன் ராமலிங்கம் ஆகியோர் பேசுகின்றனர்.

### கொள்ளை: நடிகர் கைது

ஐதராபாத், ஜூலை 4— பல்வேறு திருட்டு மற்றும் கொள்ளை வழக்குகளில் சம்பந்தப்பட்டதாக கூறப்படும் தெலுங்கு நடிகர் மதுல்லா பிரசாத். இவர் தெலுங்கு திரைப்படங்களில் நடித்துள்ளாராம்.

இவர் சென்னையிலும் ஐதராபாத்திலும் பல திருட்டு வழக்குகளில் சம்பந்தப்பட்டுள்ளதாகக் கூறப்படுகிறது.

ஐதராபாத் நகரில் சமீபத்தில் இவர் இரு கொள்ளைகளில் ஈடுபட்டு அப்பணத்தில் கார் வாங்கினாராம்.

இங்குள்ள மாநகராட்சி அலுவலகம் முன்புநிறுத்தி வைக்கப்பட்டிருந்த மோட்டார் சைக்கிளை இவர் திருடி வைத்திருந்தாராம்.

அந்த மோட்டார் சைக்கிளில் சென்று கொண்டிருந்த போது போலீசார் அவரை வழி மறித்து கைது செய்தனா.



## தூத்துக்குடி மின் அனுப்புத் திட்டமும், பகிர்வுத் திட்டமும் பற்றிய

# அறிவிப்பு

தமிழ்நாடு மின்சார வாரியம், "தூத்துக்குடி மின் அனுப்பு மற்றும் பகிர்ந்தளிப்புத் திட்டம்" என்ற ஒரு திட்டத்திற்கு ஒப்புதல் அளித்துள்ளது. இதற்கான மதிப்பீடு ரூ. 3088 லட்சங்களாகும். இத்திட்டத்தின் நோக்கம் தூத்துக்குடி அனல் மின் நிலையத்தில் உற்பத்தியாகும் மின் சக்தியை நுகர் விடங்களுக்கு கொண்டுசெல்வதாகும். இத்திட்டத்தின் கீழ் கட்டப்படும் மின்சாரப் பணிகள் பின் வருமாறு:—

அ) 230 கி.வோ. இரட்டைச் சுற்று மின் தொடர் 5 கி. மீ.
ஆ) 230 கி.வோ. ஒற்றைச் சுற்று மின் தொடர் 500 கி. மீ.
இ) 110 கி.வோ. இரட்டைச் சுற்று மின் தொடர் 6.2 கி. மீ.
ஈ) 110 கி.வோ. ஒற்றைச் சுற்று மின் தொடர் 405 கி. மீ.
உ) 230-110 கி.வோ. தன்னியக்க துணை மின் நிலையங்கள்:
1) தூத்துக்குடி
2) காரைக்குடி
3) திருவாரூர்
ஊ) விரிவாக்கம் செய்யப்பட உள்ள துணை மின் நிலையங்கள்;
1) கயத்தாறு
2) மதுரை
3) நெய்வேலி
எ) 110 கி. வோ. மின் நிலையங்களாக மாற்றப்பட உள்ள 66 கி. வோ. மின் நிலையங்கள்
1) காரைக்குடி
2) பரமக்குடி
3) மேலக்கல்லூர்
4) பணகுடி
5) நாகர்கோயில்
6) தக்கலை
7) பேச்சிப்பாறை
8) கோவில் வெண்ணி
ஏ) 110 கி. வோ. மின் நிலையங்கள் ஆக மாற்றப்பட உள்ள 33 கி. வோ. மின் நிலையங்கள்.
1) அருப்புக்கோட்டை
2) கமுதி
ஐ) 25 எம். வி. ஏ. ஆர். திறன் உள்ள சுழல் மின் உறைகலம் ஒன்றை கயத்தாறு துணை மின் நிலையத்தில் நிறுவதல்.
ஒ) 25 எம். வி. ஏ. ஆர். திறன் உள்ள நிலை மின் உறைகலன்களை மதுரையை சுற்றியுள்ள துணை மின் நிலையங்களில் நிறுவுதல்.
ஓ) 25 எம். வி. ஏ. ஆர். திறன் உள்ள நிலை மின் உறைகலன்களை திருச்சியை சுற்றியுள்ள துணை மின் நிலையங்களில் நிறுவுதல்.
ஔ) மின் கம்பித்தொடர் மூலம் ஒவ்வொரு துணை மின் நிலையங்களுக்கும் இடையே செய்தித் தொடர்பு கொள்ள தேவையான கருவிகளை நிறுவுதல்.
ஃ) தேவையான துணை மின் நிலையங்களில் 110 கி.வோ. விரிவாக்கம் செய்தல்.

இந்த அறிவிப்பு, மின்சாரம் (வழங்கல்) சட்டம் 1948 (1976 அக்டோபரில் திருத்தப்பட்ட) 28 (3) பிரிவின்படி வெளியிடப்படுகிறது.

**தலைமைப் பொறியாளர் (மின் தொடர்பு)**

DIPR. 38289 81-1

Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029

Editor:
E. PARASURAMAN